உ

கடவுள்துணை.

# புருட சாமுத்திரிகா லக்ஷணம்.

---

இஃது.

செம்பரத்தைச்சார்ந்த

தில்லைவிடங்கன்

சேந். துரைசாமிபிள்ளை

அவர்களால்,

திரிசிரபுரம்.

புஸ்தகவியாபாரம்

தி - சபாபதிபிள்ளையவர்களது

ஸ்ரீமட்டுவார்குழலம்பாள்

அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

௧௮௯௦ 1890

உ

கணபதி துணை.

சுப்பிரமணியசுவாமிகள்

அகஸ்தியமாமுனிவருக்குத்

திருவாய்மலர்ந்தருளிய

# புருட சாமுத்திரிகா லக்ஷணம்.

---

கடவுள் வணக்கம்.

வெண்பா.

தழையுமெழிற்புருடசாமுத்திரிகா
விழையுமிலக்ஷணத்தைமேலா-மொழியவரும்
ஐந்துகரத ல்வாயருண்மும்மதமிருதாள்
மைத்தொருகோட்டங்களிற்றின்மாண்பு.

நூல்.

புருஷருக்குரிய இலக்ஷணங்கள் பலவாயினும் அவற்றுள் சிறப்புள்ளவைகள் முப்பத்திரண்டு.

ஐந்து இடம் நீண்டும், ஐந்து இடம் மிருதுவாயும், ஆறு இடம் உயர்ந்தும், ஏழு இடம் சிவந்தும், மூன்று இடம் விசாலமாகியும், மூன்று இடம் குறுகியும், மூன்று இடம் தாழ்ந்தும், இருக்கவேண்டும்.

நீண்டிருக்கவேண்டிய ஐந்திடங்களாவன-கண், கை, கதுப்பு, முழங்கால், மூக்கு, என்பனவாம். மிருதுவாயிருக்கவேண்டிய ஐந்திடங்களாவன-மயிர், விரல், நகம், தோல், பல் என்பனவாம். உயர்ந்திருக்கவேண்டிய ஆறிடங்களாவன-நெற்றி, தோள்கள், வயிறு, அக்குள், மார்பு, புறங்கை, என்பனவாம். சிவந்திருக்கவேண்டிய ஏழிடங்களாவன-கடைக்கண், உள்ளங்கை, நகம், வாய், ஆண்குறி, உள்ளங்கால், உதடு என்பனவாம். விசாலமாயிருக்கவேண்டிய மூன்றிடங்களாவன - மார்பு, புஜங்கள் என்பனவாம். குறுகியிருக்கவேண்டிய மூன்றிடங்களாவன கழுத்து, முழங்காலின்கீழ், ஆண்குறி என்பனவாம். தாழ்ந்திருக்கவேண்டிய மூன்றிடங்களாவன - நடுமார்பு, நெற்றியின்கீழ்ப்பாகம், உந்தி என்பனவாம்.

இத்தன்மையவாகிய விலக்ஷணங்கள் சிறிதும் பழுதின்றி யமையப்பெற்றவன் கிரீடாதிபதியாயிருப்பான்.

யற்றபடி சாதாரணமா யவரவருக்குரிய விலக்ஷணங்களும் அவ
ற்றின் பலன்களும் பின் வருமாறுகாண்க.

தலை.

வட்டமாகப் பருத்திருக்கிற தலையையுடையவன் செல்வவந்தனா
யிருப்பன்-வட்டமாகச் சிறுத்திருக்கிற தலையையுடையவன் அழகும்
செல்வமும் உடையவனாயிருப்பன். நீண்டிருக்கிற தலையையுடைய
வன் வறுமையுடையவனாயிருப்பன்.

தலைமயிர்.

பிளவுபொருந்தியமயிருடையவன் மிகுந்தசெலவுடையவனும் சுக
போசனமற்றவனுமாயிருப்பான் - பருத்துக்கறுத்தமயிருள்ளவன்
செல்வமுடையவனா யிருப்பான்-பருத்தச்சிவந்தமயிருள்ளவன் வறு
மையுடையவனாயிருப்பான்-யானைமயிர்போன்றமயிருள்ளவன் வியா
தியுஞ் செல்வமு முடையவனாயிருப்பான் - நெருங்கியமயிருள்ளவ
ன்றீர்க்காயுளுடையவனா யிருப்பான்-சிறுத்தச்செவந்தமயிருள்ளவ
ன்அதிக காமமுடையவனா யிருப்பான்-சுருண்டமயிருள்ளவன் விகா
ரமும்சொற்ப செலவுமுடையவனா யிருப்பான்-மிகுந்த நீண்டமயி
ருள்ளவன் அதிகபழிச்சொற்குரியவனா யிருப்பான்.

தலையின்சுழி.

தலையினடுவேயொருசுழி வலமாக இருக்கப்பெற்றவன் அதிகசம்
பத்துள்ளவனாவான். இடதுபுறத்திலொருசுழி யிடமாயிருக்கப்பெற்
றவன் வறுமையுடையவனாவான். இரண்டுசுழி இடப்புரியாயிருக்கப்
பெற்றவன் ஆயுள்பரியந்தம் வறுமையுடையவனாவான். இடதுபுறத்
தில் வலஞ்சுழியிருக்கப்பெற்றவன் பூரணாயுளுடையவனாவான் வல
துபுறத்தில் ஒருசுழி வலம்புரியாயிருக்கப்பெற்றவன் மிகுந்தசெல்வ
முள்ளவனாவான் மூன்றுசுழி இடப்புரியாக இடதுபுறத்திலிருக்கப்
பெற்றவன் விரைவில் தந்தைதாய்களை இழப்பான். மூன்றுசுழிஇடம்
புரியாகத் தெற்குகண்போற் கூடியிருக்கப்பெற்றவன் வெட்டுப்படு
வான்ஒருசுழி வலப்புரியும் ஒருசுழி இடம்புரியா யிருக்கப்பெற்றவ
ன்சிறிதுநாள்வறுமையுஞ் சிறிதுநாள்செல்வமு முடையவனாவான்.

முகம்.

சிறுத்தமுக முடையவன் அழகுள்ளவனா யிருப்பான்-சிங்கமுகம்
போற் பருத்தமுக முடையவன் யாவருக்கும் யோக்கியனா யிருப்பா
ன்-பருத்துக் கறுத்த மிகுந்த மயிருள்ள முகமுடையவன் வசிகர
மும் செல்வமும் உள்ளவனாயிருப்பான்-செவந்த மயிருள்ள முக

முடையவன் கபடியாயிருப்பான் - மிருதுவானமயிருள்ள முகமுடையவன் அழகுள்ளவனாயிருப்பான்.

## முகத்தின் சுழி.

முகத்தின்வலதுபக்கத்தில் ஒருசுழிவலப்புரியா யிருக்கப்பெற்றவன்சுகசௌபாக்கியமுடையவனா யிருப்பான்-இடதுபக்கத்தில் இடப்புரியாயிருக்கப்பெற்றவன் சிலநாள்வறுமையும் சிலநாள்செல்வமு முடையவனாயிருப்பான் இடதுபக்கத்தில் வலப்புரிசுழியிருக்கப்பெற்றவன் நல்லநினைவுடையவனும் நினைத்தது முடிக்காதவனுமாயிருப்பான்-தாள்வாயின்மேல் இரண்டுசுழி வலப்புரியா யிருக்கப்பெற்றவன் அதிகசெல்வமுள்ளவனாயிருப்பான்-இடப்புரியா யிருக்கப்பெற்றவன் வறுமையும் வியாதியு முடையவனா யிருப்பான்.

## நெற்றி.

நெற்றிநான்குவிரலகலமிருக்கப்பெற்றவன் ஞானவானாயிருப்பான் - மூன்றுவிரலகலமிருக்கப்பெற்றவன் ஞானமும் செல்வமு முடையவனாயிருப்பான் - இரண்டுவிரலகலமிருக்கப்பெற்றவன் மிகுந்தசெல்வம் உடையவனாயிருப்பான் ஒருவிரலகல மிருக்கப்பெற்றவன் மூடனாயிருப்பான்

## நெற்றியின்சுழி.

நடுநெற்றியிலொருசுழி வலப்புரியாயிருக்கப்பெற்றவன் செல்வமுள்ளவனாயிருப்பான்-இடப்புரியா யிருக்கப்பெற்றவன் வறுமையுள்ளவனாயிருப்பான் முன்னெற்றியிலிடமாக ஒருசுழியிருக்கப்பெற்றவன் தந்தைதாயார்களை விரைவில் இழப்பான்-இரண்டுசுழி வலமாகஇருக்கப்பெற்றவன் காமவிகாரியாயும் பாவியாயுமிருப்பான் நெற்றியில் மயிர்மிகுந்திருக்கப்பெற்றவன் அதிக கபடனாயுங்கடன்காரனாயுமிருப்பான்.

## நெற்றியின் இறை.

நெற்றியில் ஐந்துஇறை யிருக்கப்பெற்றவன் ௧௦௦ வயதுடையவனாயிருப்பான்-நான்கு இறையிருக்கப்பெற்றவன் ௮௦-வயதுடையவனாயிருப்பான்-மூன்றுஇறை யிருக்கப்பெற்றவன்-௬௦-வயதுடையவனாயிருப்பான் இரண்டுஇறை யிருக்கப்பெற்றவன் ௪௦-வயதுடையவனாயிருப்பான்-ஒரு இறையிருக்கப்பெற்றவன் ௨௦-வயதுடையவனாயிருப்பான்-நெற்றியிலே ஒருநரப்பு குறுக்காக எழும்பியிருக்கப்பெற்றவன் குணவானும் அதிபதியுமாயிருப்பான் வெகுநரம்பெழும்பியிருக்கப்பெற்றவன் வறுமையும் வியாதியுமுடையவனாயிருப்

யான்-நெற்றியில் மயிரில்லாதிருக்கப்பெற்றவன் பெருமை யுடைய வனாயிருப்பான்.

## புருவம்.

புருவத்தின் கடைமயிர் சாய்ந்து கறுத்து மிருதுவாக இருக்கப் பெற்றவன் சம்பத்துள்ளவனா யிருப்பான் - பருத்திருக்கப்பெற்ற வன் பலமுள்ளவனாயிருப்பான் - மேனோக்கி இருக்கப்பெற்றவன் கபடமும் வறுமையு முடையவனா யிருப்பான்-கூட்டுப்புருவமா யிருக் கப்பெற்றவன் தந்தைதாயர்களை விரைவில் இழப்பான்.

## கண்.

கண்ணிடமாய் செவிவரையோட்டி சரியாகவும் கடைக்கண்சிவந் தும் இருக்கப்பெற்றவன் அதிகசெல்வ முள்ளவனாயிருப்பான்-இமை மயிர் நெருங்கி அடர்த்தியா யிருக்கப்பெற்றவன் செல்வமுள்ளவனா யிருப்பான் கண்ஒன்று சிறுத்து ஒன்றுபருத்திருக்கப்பெற்றவன் வியாதியுடையவனா யிருப்பான்-சிமிட்டுக்கண் ணிருக்கப்பெற்றவன் கபடியாயிருப்பான் மாறுகண் ணிருக்கப்பெற்றவன் பொய்யனும்வ ஞ்சனையுடையவனுமா யிருப்பான் சிறுவிழியிருக்கப்பெற்றவன் ஆயுள் விர்த்தி யுடையவனாயிருப்பான்- விழி மிகக்கறுத்திருக்கப்பெற்றவன் வெகுபெண்களோடு போகிப்பவனாயிருப்பான்-தேனிறமாயிருக்கப் பெற்றவன் காமியாயும் கபடியாயு மிருப்பான் வெண்மையாயிருக் கப்பெற்றவன்-மிகுந்த கபடியா யிருப்பான்.

## கண்மச்சம்.

வலதுகண்ணின் வெள்ளைவிழியில் மச்சமிருக்கப் பெற்றவன் புத் திகூர்மையுள்ளவனா யிருப்பான்- இடதுகண்ணின் வெள்ளைவிழியில் மச்சமிருக்கப்பெற்றவன் காமவிகாரியா யிருப்பான் பிறவிக்குருடா யிருக்கப்பெற்றவன் பாவிய மனக்குறைவையுடையவனாயிருப்பான் விழிக்கண்குருடானால் மிஞ்சியபத்தி யுடையவனாயிருப்பான்.

## மூக்கு.

மூக்கு தன்கையால் நாலுவிரல்நீள மிருக்கப்பெற்றவன் ஆயு ளும் செல்வமு முடையவனாயிருப்பான்-அதற்குமேல் நீண்டிருக்கப் பெற்றவன் கடினபோக முடையவனா யிருப்பான்-அந்தஅளவிற்குக் குறைந்திருக்கப்பெற்றவன் அற்பபோகமுடையவனா யிருப்பான்- பருத்திருக்கப்பெற்றவன் திரவியவத்தனாயிருப்பான்-ஒருபுறஞ் சிறுத் திருக்கப் பெற்றவன் வியாதியுடையவனா யிருப்பான்-நடுத்தரமாயிரு க்கப்பெற்றவன் கபடமும் வறுமையும் உடையவனாயிருப்பான்.

## மூக்கின் மச்சம்.

மூக்கின் நுனியில் மச்ச மிருக்கப்பெற்றவன் சொற்பசெல்வுடைய வனுயிருப்பான்- வலதுபுறத்தில் மச்சமிருக்கப்பெற்றவன் செல்வமுடையவனுயிருப்பான் - இடதுபுறத்தில் மச்சமிருக்கப்பெற்றவன் வறுமையுடையவனுயிருப்பான் - மூக்கில்வடுவிருக்கப் பெற்றவன் பெருஞ்செல்வ முடையவனுயிருப்பான்.

## வாய்.

வாய் சிறுத்திருக்கப்பெற்றவன் செல்வமுடையவனு யிருப்பான் சிவந்திருக்கப் பெற்றவன் அழகுடையவனு யிருப்பான்-சுருத் திருக்கப்பெற்றவன் கடனுடையவனுயிருப்பான் - மிகக்குறுத்திருக் கப்பெற்றவன் மிடியுடையவனுயிருப்பான் - வார்த்தை வலுவாயிரு க்கப்பெற்றவன் முன்கோபமும் கபடில்லாமையு முடையவனு யிருப்பான்- மெதுவாயிருக்கப் பெற்றவன் கபடும் நற்குணமும் உடையவனு யிருப்பான். பிறந்ததுமுதல் ஊமையாயிருக்கப்பெற் றவன் வெகுபாவியும் கபடியுமாயிருப்பான்.

## வாயின்ரேகை.

வாய்க்குள்ளே சங்குசக்கரம்போ லிருக்கப்பெற்றவன் அதிகசம் பத்துள்ளவனு யிருப்பான்- வேலாயுதம்போ லிருக்கப்பெற்றவன் ஞானமுடையவனுயிருப்பான்-கமலம்போ லிருக்கப்பெற்றவன் வித்தையுடையவனு யிருப்பான்-சாமரம்போ லிருக்கப்பெற்றவன் வயதுஞ் செல்வமு முடையவனுயிருப்பான்- அங்குசபாசம்போ லிருக் கப்பெற்றவன் வெற்றியுடையவனு யிருப்பான்-குடைபோ லிருக்க ப்பெற்றவன் செல்வமுடையவனுயிருப்பான்-பாம்புபோ லிருக்கப் பெற்றவன் வறுமையும் கடனு முடையவனுயிருப்பான்.

## வாயின்சுழி.

வாயில் வலம்புரிசுழியிருக்கப் பெற்றவன் தைரியவார்த்தையுடை யவனு யிருப்பான்-இடம்புரிசுழி யிருக்கப்பெற்றவன் வறுமையுடை யவனு யிருப்பான்.

## பற்கள்.

பற்கள் சிறுத்திருக்கப்பெற்றவன் அழகுடையவனு யிருப்பான்- விலகியிருக்கப்பெற்றவன் காமமுடையவனு யிருப்பான்- பருத்திரு க்கப்பெற்றவன் தரித்திரமுடையவனு யிருபபான்-தெத்துப்பல்லிரு க்கப்பெற்றவன் முன்னேஉண்டாகி உடனே அழியும்வித்தை யுடை யவனு யிருப்பான்-மேற்பல் கீழ்ப்பல் நடுப்பல் ஆகிய இவைகளோடு

சிறுபல்லிருக்கப்பெற்றவன் செல்வமுடையவனும் புத்தியில்லாதவனுமா யிருப்பான்.

அதரம்.

அதரம் சிறுத்திருக்கப்பெற்றவன் செல்வமுடையவனா யிருப்பான்

கன்னம்.

கன்னம் நெடுகியிருக்கப்பெற்றவன் சம்பத்துள்ளவனா யிருப்பான்-தழ்வாய் பருத்தாற்போல் இரண்டாயிருக்கப் பெற்றவன் கபடுள்ளவனா யிருப்பான்- ஒன்றாயிருக்கப் பெற்றவன் செல்வமுடையவனா யிருப்பான்-தாடியில்லை வலஞ்சுழி யிருக்கப்பெற்றவன் நல்லபுசி புடையவனா யிருப்பான்-இடஞ்சுழியிருக்கப்பெற்றவன் வறுமையுடையவனா யிருப்பான்.

காது.

காதுமேற் செவியிடமாயிருக்கப்பெற்றவன் முன்கோபமுடையவனாயிருப்பான் - குறுகியிருக்கப்பெற்றவன் செல்வமுடையவனா யிருப்பான் உள்ளே மேல் செவி மடங்கியிருக்கப்பெற்றவன் கபடுடையவனாயிருப்பான்- நடுவுச்சியில் பருத்திருக்கப்பெற்றவன் வறுமையுடையவனா யிருப்பான்-உள்செவி வலப்புரியா யிருக்கப்பெற்றவன் சம்பத்துடையவனா யிருப்பான் - செவியில் மயிர் பருத்துக் கறுத்து நெருங்கிமேல்நோக்கி யிருக்கப்பெற்றவன் சவுரியமுடையவனா யிருப்பான்-கீழ்நோக்கிப் பருத்திருக்கப் பெற்றவன் பிடியுடையவனாயிருப்பான்.

கழுத்து.

கழுத்து தன்கையினால் நான்கு அங்குலமும் பாடும்போது நாம்பெழாமல் திரண்டும் இருக்கப்பெற்றவன் அழகும் ஆயுளும் உடையவனா யிருப்பான்- நரம்புகாணப்பெற்றவன் பிடியுடையவனா யிருப்பான்-கழுத்து நெடுகியிருக்கப்பெற்றவன் வறுமையுங்கபடுமுடையவனா யிருப்பான் - கழுத்தில் நான்கு இறையிருக்கப்பெற்றவன் தீர்க்காயுளும் செல்வமுமுடையவனா யிருப்பான் - இரண்டு இறையிருக்கப்பெற்றவன் கபடியா யிருப்பான் ஒருஇறையிருக்கப்பெற்றவன் நினைத்த காரியத்தை முடிக்காதவனா யிருப்பான் - ஒரு இறையுமில்லா திருக்கப்பெற்றவன் மனக்கிலேச முடையவனா யிருப்பான்.

பிடரி.

பிடரியில் இரண்டுஇறையிருக்கப்பெற்றவன் சுகபோசனமுடையவனாயிருப்பான்-பிடரி உயர்ந்திருக்கப்பெற்றவன் செல்வமுடையவனாயிருப்பான் உலர்ந்திருக்கப்பெற்றவன் வறுமையுடையவனா யிருப்பான்.

## தோள்

தோளிரண்டும் உயர்ந்திருக்கப்பெற்றவன் செல்வமுடையவனுயிருப்பான்-தாழ்ந்திருக்கப்பெற்றவன் தீர்க்காயுளுடையவனுயிருப்பான்-சரியாயிருக்கப்பெற்றவன்மிகுந்த அறிவுடையவனுயிருப்பான் இரண்டுதோள் மயிர்மிகுதியாயிருக்கப்பெற்றவன் நினைத்தகாரியத்தைச்செய்யமுடியாதவனுயிருப்பான்.

## அக்குள்

அக்குள் உயர்ந்திருந்து மயிர்சிறுத்துக்கறுத்து நாற்றமில்லாதிருக்கப்பெற்றவன்சம்பத்துள்ளவனுயிருப்பான் - அக்குளில் கற்றாழைநாற்றம்பொருந்தியிருக்கப்பெற்றவன் அதிககாமவிகாரியாயிருப்பான் கண்ணாம்புநாற்றம் பொருந்தியிருக்கப்பெற்றவன் பிடிவாதமுடையவனுயிருப்பான்,யானைமூத்திரம்போன்றநாற்றம்பொருந்தியிருக்கப்பெற்றவன் அற்பயோகியாயிருப்பான்-இளநீர்போன்றவாசனைபொருந்தியிருக்கப்பெற்றவன்தீர்க்கயோகியாயிருப்பான்-தாமரைப்பூவாசனைபொருந்தியிருக்கப்பெற்றவன் அனேகபெண்களையணையவனுயிருப்பான்ஒருமயிருமில்லாதிருக்கப்பெற்றவன் போகமுடையவனுயிருப்பான்- மயிர்நெருங்கித்தாழ்ந்திருக்கப்பெற்றவன் மறுமையுடையவனுயிருப்பான்.

## கைகள்.

கைகள் முழங்காலின் கீழ்வரையில்நீண்டிருக்கப்பெற்றவன் அதிகசெல்வமும் தீர்க்காயுளும்ஸர்வஸம்பூர்ணவிலாசமுமுடையவனுயிருப்பான்- முழங்கால்மட்டிலிருக்கப்பெற்றவன் செல்வமுடையவனுயிருப்பான் முழங்காலுக்குஒருவிரல் மேலிருக்கப்பெற்றவன் நல்லபோஜனமுடையவனுயிருப்பான் இரண்டுவிரல்மேலிருக்கப் பெற்றவன்-சொல்செல்லுதலுடையவனுயிருப்பான்-மூன்றுவிரல்மேலிருக்கப்பெற்றவன் அழகும்ஐஸ்வரியமும் உடையவனுயிருப்பான்-நான்குவிரல்மேலிருக்கப் பெற்றவன்அற்பசெல்வமுடையவனுயிருப்பான்-ஐந்துவிரல்முதல் அதற்குமேற்பட்டிருக்கப்பெற்றவன் வறுமையும்கிலேசமும்கஷ்டமும் உடையவனுயிருப்பான்இரண்டு மிருதுவாய்பருத்து மிருதுவாயிருக்கப்பெற்றவன்-அழகும்ஆயுளும்செல்வமு முடையவனுயிருப்பான் - மிகப்பருத்திருக்கப்பெற்றவன் கிலேசமுடையவனுயிருப்பான் - மூக்குச்சிறுத்திருக்கப்பெற்றவன்வறுமையுடையவனுயிருப்பான்

## கைவிரல்.

கையின்சிறுவிரல் அணிவிரல்மட்டும் இருக்கப்பெற்றவனுக்குவயது ௧00 அணிவிரல்மேலிறைக்குமேலிருக்கப்பெற்றவனுக்குவயது-௯0-மேலிறைக்குச்சரியாயிருக்கப் பெற்றவனுக்குவயது-௮0-மேலிறைக்குச் சற்குகீழிருக்கப்பெற்றவனுக்குவயது-௭௫-மேலிறைகீழிறை ஆகியஇரண்டினடுவுக்குச்சற்றுமேலாக இருக்கப்பெற்றவனுக்குவயது-௭0-மேலிறைக்குக்கீழிறைக்கும் சரிநடுவாயிருக்கப்பெற்றவனுக்கு வயது-௬0-அதற்குச்சற்றுகீழிருக்கப்பெற்றவனுக்குவயது -௫0- அதிலுந்தாழ்ந்திருக்கப்பெற்றவர்களுக்கெல்லாம் வயதுமூன்றயே அற்பமாகும்இதிலே சமுமுண்டு.

## உள்ளங்கைரேகை.

உள்ளங்கைரேகை அற்பமாய் சிவந்துசிறுத்திருக்கப்பெற்றவன் செல்வமும்ஆயுளுமுடையவனாயிருப்பான்-கனத்திருக்கப்பெற்றவன்-துக்கமுடையவனாயிருப்பான்-வலது கையில்சங்குசக்கரம்போலிருக்கப்பெற்றவன்-மிகுந்ததிரவியவருமானமுள்ளவனும் இரப்பவர்க்குக் கொடுப்பவனுமாயிருப்பான்-மச்சரேகையிருக்கப்பெற்றவன் மிகுந்தசெல்வமுடையவனாயிருப்பான்-குடைபோலிருக்கப்பெற்றவன்-உதாரகுணமுடையவனாயிருப்பான்-தமரகம்போலிருக்கப்பெற்றவன்-புகழுடையவனாயிருப்பான் வாள்போலிருக்கப்பெற்றவன்-வீரியவானாயிருப்பான் கும்பம்போலிருக்கப்பெற்றவன்-பொறுமை யுடையவனாயிருப்பான்-சந்திரன்போலிருக்கப்பெற்றவன்வித்துவானாயிருப்பான்- வெண்சாமரம்போலிருக்கப்பெற்றவன்வகுஜனங்களோடு கூடிவாழ்வான்- தாமரைபுட்பம்போலிருக்கப் பெற்றவன்-எந்நாளும்லக்ஷ்மிவிலாசமுடையவனாயிருப்பான்- மாலைபோலிருக்கப்பெற்றவன்போகபாக்கியத்தோடிருப்பான்-வேல்போலிருக்கப்பெற்றவன்வெற்றியுடையவனாயிருப்பான் இலிங்கம்போல்இருக்கப்பெற்றவன் சிவபத்திமுதலியதேவாபக்தியுடையவனாயிருப்பான்-ரிஷபம்போலிருக்கப்பெற்றவன்வாகனப்ரதிஷ்டையுடையவனாயிருப்பான்-மணிக்கட்டுமுதல் நடுவிரல் நுனிவரைக்கும் ஒருரேகை இருக்கப்பெற்றவன் - ஞானியாயிருப்பான்-அநாமிகவிரல் அடியிலே வந்திருக்கப்பெற்றவன்-வித்துவானாயிருப்பான்-அதுசிறுவிரல் அடியிலேவந்திருக்கப்பெற்றவன் செல்வமுடையவனாயிருப்பான்-அணிவிரலடியிலேவந்திருக்கப்பெற்றவன்- ஆபரணமும் கிலேசமு முடையவனாயிருப்பான்-சுண்டுவிரலடியிலே வந்திருக்கப்பெற்றவன்-காமவிகாரியாயிருப்பான்-பெருவிரல்நடுவிலே வந்திருக்கப்பெற்றவன்-பலமாதரையணைவான் - உள்ளங்கையில்வந்திருக்கப்பெ

றவன்-செல்வமும்புத்திரசம்பத்துமுடையவனுமிருப்பான் அந்தரேகை யில்லாதிருக்கப்பெற்றவன் மூடனுமிருப்பான்-உள்ளங்கைரேகை பருத் திப்புகைநிறமாயிருக்கப்பெற்றவன் மகாபாவியாயிருப்பான்.

## விரல்களின் இறை

பெருவிரலின்-இறைஇல்சங்கிலிபோல்ஒரு ரேகையிருக்கப்பெற்றவன் பலராலுந்தொழப்படுவான்-நடு இறை பிளவு யிருக்கப்பெற்றவன்-வெகு தானியமுடையவனுமிருப்பான்- ஒன்றுயிருக்கப்பெற்றவன்- அச்சமு டையவனுமிருப்பான்-மேல்இறை ஒன்று இருக்கப்பெற்றவன் - பக்தியு டையவனுமிருப்பான்-பலபலவிதமாயிருக்கப்பெற்றவன் கபடமுடையவனு மிருப்பான்-வலதுகைபெருவிரலின் இறைமேல்வலஞ்சுழி யிருக்கப்பெற் றவன்வெகுவிதசெல்வமுடையவனுமிருப்பான்-இடஞ்சுழியிருக்கப்பெற் றவன் ஆயுள்விர்த்தியுடையவனுமிருப்பான்-மடிப்பிருக்கப்பெற்றவன் வ றுமையுடையவனுமிருப்பான்-சுட்டுவிரலில் அடி இறையொன்றுயிருக்கப் பெற்றவன் வறுமையுடையவனுமிருப்பான்- பலவாயிருக்கப் பெற்றவன் வெற்றியுடையவனுமிருப்பான்நடுஇறையொன்றுயிருக்கப் பெற்றவன்-சிக்க னமுடையவனுமிருப்பான்பலவாயிருக்கப்பெற்றவன்கபடமுடையவனுமிரு ப்பான்-மேலிறையின்மேல்வலஞ்சுழியிருக்கப்பெற்றவன் அதிகசம்பத்து டையவனுமிருப்பான்- இடஞ்சுழியிருக்கப்பெற்றவன்,நல்லபுத்தியுடைய வனுமிருப்பான்-மடிப்பிருக்கப்பெற்றவன் -வீண்செலவுடையவனுமிருப் பான்-நடுவிரலில் ஒருரேகையிருக்கப்பெற்றவன்- சிக்கனமுள்ளவனுமி ருப்பான்-மேல் பலரேகையிருக்கப்பெற்றவன்விதரணமுள்ளவனு இருப் பான் இறையொன்றுயிருக்கப்பெற்றவன்வித்தையுள்ளவனுமிருப்பான்ப லவாயிருக்கப்பெற்றவன்-கபடமுள்ளவன்யிருப்பான்மேல்இறையின்மேல் வலஞ்சுழியிருக்கப்பெற்றவன்மந்திரியாவான் இடஞ்சுழியிருக்கப்பெற்றவன் -புத்திமானுமிருப்பான்-வலதுகைமோதிரவிரல் அடி இறையொன்றுயி ருக்கப்பெற்றவன்செல்வனுமிருப்பான்-பலவாயிருக்கப்பெற்றவன் து ன்பமுடையவனுமிருப்பான்- நடுவிரல்நடு இறையொன்று யிருக்கப்பெற் றவன்-வித்தையுடையவனுமிருப்பான்பலவாயிருக்கப்பெற்றவன்- ஸ்திரி போகமுடையவனுமிருப்பான் நடுவிரல்மேலிறையொன்றுயிருக்கப்பெ ற்றவன்- அற்பபோகமுடையவனுமிருப்பான்பலவாயிருக்கப்பெற்றவன் அதிகபோகமுடையவனுமிருப்பான்நடுவிரல்மேலிறைமேல்வலஞ்சுழியி

ருக்கப்பெற்றவன்சுகபோஜனமுள்ளவனாயிருப்பான் இடஞ்சுழியிரு
க்கப்பெற்றவன்சுகபோஜனமில்லாதவனாயிருப்பான்மடிப்பாயிருக்கப்பெ
ற்றவன்வீண்செலவுடையவனாயிருப்பான்வலதுகை அணிவிரல்அடியிறை
யொன்றுயிருக்கப்பெற்றவன்போகமுள்ளவனாயிருப்பான்இரண்டாயிரு
க்கப்பெற்றவன்வெகுபூஷணமுள்ளவனாயிருப்பான் பலவாயிருக்கப்பெ
ற்றவன்வெற்றியுள்ளவனாயிருப்பான்-நடுஇறையொன்றேயிருக்கப்பெற்
றவன்அலைந்துதிரிவான்-பலவாயிருக்கப்பெற்றவன்பந்துக்களை இரக்ஷிப்
பான்மேலிறையொன்றுயிருக்கப்பெற்றவன்தேசாந்திரியாவான்பலவாயிரு
க்கப்பெற்றவன்-அதிககாமியாவான் - அணிவிரல்பேரிறைமேல்வலஞ்சுழி
யிருக்கப்பெற்றவன்-பலவிடத்துமுபசாரமுள்ளவனாயிருப்பான்- இடஞ்
சுழியிருக்கப்பெற்றவன் - அதிகவார்த்தையாடுகிறவனாயிருப்பான்-மடிப்
பாயிருக்கப்பெற்றவன்-கிலேசமுடையவனாயிருப்பான்- வலதுகையின்
சிறுவிரல்அடியிறையொன்றுயிருக்கப்பெற்றவன்- கபமுடையவனாயிருப்
பான்- பலவாயிருக்கப்பெற்றவன் - விகடகுணமுடையவனாயிருப்பான்-
நடுஇறையொன்று யிருக்கப்பெற்றவன்-அழகுடையவனாயிருப்பான்-ப
லவாயிருக்கப்பெற்றவன் - ஆயுள்விர்த்தியுடையவனாயிருப்பான் - மேல்
இறையொன்றுயிருக்கப்பெற்றவன் - எடுத்தகாரியத்தைச்சாதிப்பவனாயி
ருப்பான்- பலவாயிருக்கப்பெற்றவன்- ஏழையாயிருப்பான்-மேல்இறை
மேல்வலஞ்சுழியிருக்கப்பெற்றவன்- தீர்க்காயுளுடையவனாயிருப்பான்-
இடஞ்சுழியிருக்கப்பெற்றவன்- பலமுடையவனாயிருப்பான்- மடிப்பாயி
ருக்கப்பெற்றவன் - வெகுசெலவுடையவனாயிருப்பான்- புருஷர்களுக்கு
இடதுகையும்-ஸ்திரீகளுக்குவலதுகையும்பார்க்கக்கூடாது- வலதுகையி
ல்ஆறுவிரலிருக்கப்பெற்றவன்- மிகுந்தசெல்வமுடையவனாயிருப்பான்-
இடதுகையிலாறுவிரலிருக்கப்பெற்றவன்-மிடியுடையவனா யிருப்பான்-
சிறுவிரலின்கீழேகையோரத்திலொருரேகையிருக்கப்பெற்றவன்- ஒருவி
வாகமுள்ளவனாயிருப்பான்-இரண்டுரேகையிருக்கப்பெற்றவன். இரண்டு
விவாகமுள்ளவனாயிருப்பான்-மூன்றுரேகையிருக்கப்பெற்றவன்-மூன்று
விவாகமுள்ளவனாயிருப்பான்-நான்குரேகையிருக்கப்பெற்றவன்- நான்கு
விவாகமுள்ளவனாயிருப்பான்-ஐந்துரேகைமுதல்விரல்அடியிறையின்கீழ்
வரையில்எத்தனைரேகையிருக்கப்பெற்றோனு அத்தனைபுத்திரர்களையுடை
யவனாயிருப்பான்.

## புறங்கை.

புறங்கையிருதுவாயுயர்ந்திருக்கப் பெற்றவன்- செல்வமுமழகுமுள்ளவனுமிருப்பான்- புறங்கையில்நரம்பெழுப்பெற்றவன்- வறுமையாளனுமிருப்பான்-உரோமமிருக்கப்பெற்றவன்-நகையற்றவனுமிருப்பான்.

## கைகங்கம.

கையில்ககமிருதுவாயிருக்கப்பெற்றவன்- செல்வமுடையவனுமிருப்பான்-உரமாயிருக்கப்பெற்றவன் - காமவிகாரமுடையவனுமிருப்பான்-சிவந்திருக்கப்பெற்றவன்- செல்வமுடையவனுமிருப்பான் - வெளுத்திருக்கப்பெற்றவன்- வறுமையுடையவனுமிருப்பான் - விரல்கள்மெல்லிதாயிருக்கப்பெற்றவன் அழகும் ஆயுள்விர்த்தியுடையவனுமிருப்பான்-பருத்திருக்கப்பெற்றவன்-திடவானுமிருப்பான்-நீண்டிருக்கப்பெற்றவன் குணவானுமிருப்பான்- குறுகியிருக்கப்பெற்றவன்- வறுமையுடையவனுமிருப்பான்

## முழங்கை.

முழங்கைபருத்திருக்கப்பெற்றவன்-செல்வமுங் கபடமுடையவனுமிருப்பான்- சிறுத்திருக்கப்பெற்றவன்-வறுமையுடையவனுமிருப்பான்-நரம்புதோன்றியிருக்கப்பெற்றவன்-துக்கமுடையவனுமிருப்பான்-எலும்பெழுப்பெற்றவன்-வறுமையுடையவனுமிருப்பான்-முழங்கைச் சந்தில்வலஞ்சுழியிருக்கப்பெற்றவன்-விதரணவனுமிருப்பான்-இடஞ்சுழியிருக்கப்பெற்றவன் உலுத்தனுமிருப்பான்-முழங்கை மயிர் சிறுத்துக்கறுத்திருக்கப்பெற்றவன்-எந்நேரமும் பெண்போகமுடையவனுமிருப்பான்-சிவந்திருக்கப்பெற்றவன்-வறுமையுடையவனுமிருப்பான்- பருத்திருக்கப்பெற்றவன்-பலமுடையவனுமிருப்பான்-முழங்கைக்குமேல்தோள்வளையில் மயிரில்லாதிருக்கப்பெற்றவன்-அழகுடையவனுமிருப்பான்-மயிரிருக்கப்பெற்றவன்- வறுமையும்விதரணமும்உடையவனுமிருப்பான்.

## மார்பு.

மார்புதன்கையால்-௨௪-அங்குலமிருக்கப்பெற்றவன்-செல்வமுடையவனுமிருப்பான் - குறுக்கேயொருரேகையிருக்கப்பெற்றவன்- யாவருமவணங்கத்தக்க செல்வமுடையவனுமிருப்பான் - ஒருவன்மேற்குறித்த பிர

ன்-திரவியமுள்ளவனாயிருப்பான் - சந்திரன்போ லிருக்கப்பெற்றவன்-புத்தியுள்ளவனாயிருப்பான்-உள்ளங்கால் சிவந்திருக்கப்பெற்றவன்-செல்வமுள்ளவனாயிருப்பான்-கறுத்திருக்கப்பெற்றவன்-வறுமை யுள்ளவனாயிருப்பான்-குதிகொடுக்குநடுவிரல் நுனியட்டும் ஒருரேகையிருக்கப்பெற்றவன்-எங்கேபோனாலுஞ்செல்வமுள்ளவனாயிருப்பான் - குறுக்கேஒருரேகைபுள்ளடிபோலிருக்கப்பெற்றவன் எங்கேபோனாலும் வறுமையுந்துன்பமு முள்ளவனாயிருப்பான் - இரண்டுபுள்ளடியிருக்கப்பெற்றவனுடைய முகத்திலும்விழிக்கலாகாது - கட்டிடக்கால்போல் காலுரேகையிருக்கப்பெற்றவன்-வெகுஜனங்களை ரட்சிப்பவனாயிருப்பான்,

விரல்கள்;

இரண்டுகால்களிலும் பெரியவிரலுக்கு அடுத்தவிரலும் நீண்டிருக்கப்பெற்றவன்-செல்லும்சொல்லையுடையவனாயிருப்பான் சிறுவிரலும் அடுத்தவிரலும் நடுவிரலும் நீண்டிருக்கப்பெற்றவன்-பழியுடையவனாயிருப்பான்-விரல்கள் நெருங்கியிருக்கப்பெற்றவன்-பந்துக்களோடுசேரப்பெறுநவனாயிருப்பான்-விரல்கள்கலக்க யிருக்கப்பெற்றவன் இலஞ்சேரப்பெறுநவனாயிருப்பான்-வலதுகாலில் ஆறுவிரல்கள்யிருக்கப் பெற்றவன்-வெகுசெல்வமுள்ளவனா யிருப்பான்-இடதுகாலில் ஆறுவிரல்கள் யிருக்கப்பெற்றவன்-வெகு அலைச்சலுள்ளவனாயிருப்பான்-விரல்களிலேமயிர்நெருங்கியிருக்கப்பெற்றவன்-திரவியஞ்சேர்ப்பவனாயிருப்பான் - விரல்ஒன்றுமேல் ஒன்றுகுன்றிமேலேறி யிருக்கப்பெற்றவன்-வறுமையுள்ளவனாயிருப்பான்-பெருவிரலுக்கு அடுத்தவிரல்மிகவும் நீண்டிருக்கப்பெற்றவன் வெகுபூஷணமுள்ளவனாயிருப்பான்நடுவிரல்கள் நீண்டிருக்கப்பெற்றவன் ஆயுள்விர்த்தியுள்ளவனாயிருப்பான்விரல்கள்சுருண்டிருக்கப்பெற்றவன்செல்வமுள்ளவனாயிருப்பான்வலதுகால் பெருவிரலிலேமச்சமிருக்கப்பெற்றவன்-அதிகசம்பத்துள்ளவனாயிருப்பான்-இடதுகால்பெருவிரலில்மச்சமிருக்கப்பெற்றவன்-செல்வமுள்ளவனாயிருப்பான்-மற்ற விரல்களில் மச்சமிருக்கப்பெற்றவன்-வறுமையுள்ளவனாயிருப்பான் - வலதுபெருவிரலில் மயிர் ஆவது மச்சமாவது சூழிமச்சமாவது ஒற்றைச்சமாவதுவலஞ்சுழியாவது இருக்கப்பெற்றவன்-அதிகசம்பத்துள்ளவனா யிருப்பான்-இடஞ்சுழியிருக்கப்பெற்றவனும் அதிகசம்பத்துள்ளவனாகவேயிருப்பான் மற்றவிரல்களில்-வலஞ்சுழியிருக்கப்பெற்றவன் செல்வமுள்ளவனாயிருப்பான்-இடஞ்சுழி இருக்கப்பெற்றவன்பொருள்சேர்த்துள்ளவனாயிருப்பான் இடதுகால்பெருவிரல்இடஞ்சுழியிருக்கப்பெற்றவன் - அடுத்தகாரியம் முடிக்குள்ளவனா யிருப்பான்-வலஞ்சுழியிருக்கப்பெற்றவன் ஜனருடைய பிரியனாயிருப்பான்-மற்றவிரல்களில்இடஞ்சுழி யிருக்கப்பெற்றவன்-நினைத்ததுமுடிப்பவனாயிருப்பான்வலஞ்சுழியிருக்கப்பெற்றவன்-காமவிகாரிய யிருப்பான்.

## மச்சம்,

மச்சமானது உள்ளங்காலிலு வலதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் நூலுவயதுள்ளவனாயிருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன்பாவமுள்ளவனாயிருப்பான் புறங்காலின்வலதுபக்கத்தின்நடுவில் இருக்கப்பெற்றவன்நினைத்தது முடிப்பவனாயிருப்பான்-இடதுபக்கத்தின் நடுவில் இருக்கப்பெற்றவன் நினைத்ததுமுடிக்காதவனாயிருப்பான்-கணைக்காலின்வலதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் அழகுள்ளவனாயிருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் வறுமையுள்ளவனாயிருப்பான் - வலதுமுழங்காலில் இருக்கப்பெற்றவன் செல்வமுள்ளவனாயிருப்பான்-இடதுமுழங்காலில்யிருக்கப்பெற்றவன் அலைச்சலுள்ளவனாயிருப்பான்-வலதுதொடையில்இருக்கப்பெற்றவன் நன்மையுள்ளவனாயிருப்பான் - இடதுதொடையில்இருக்கப்பெற்றவன்தீமையுள்ளவனாயிருப்பான்-வலதுபீஜத்தில் இருக்கப்பெற்றவன் பரதாரநோக்கமுள்ளவனாயிருப்பான்-இடதுபீஜத்தில் இருக்கப்பெற்றவன் ஸ்திரீயிச்சையில்லாதவனும் ஞானமுள்ளவனுமாயிருப்பான்-முதுகின்நடுவில் இருக்கப்பெற்றவன் அதிகசம்பத்துள்ளவனாயிருப்பான்-வலதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன்-செல்வமுள்ளவனாயிருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன்-வறுமையுள்ளவனாயிருப்பான்-இடதுவிலாவில் இருக்கப்பெற்றவன்-போகமற்றவனாயிருப்பான்-வலதுவிலாவில் இருக்கப்பெற்றவன் போகமற்றவனாகவேயிருப்பான்-நாபியின் வலதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் வெற்றியுள்ளவனாயிருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன்-சுகமற்றவனாயிருப்பான்-நடுவிரல்இருக்கப்பெற்றவன்-அதிகசம்பத்துள்ளவனாயிருப்பான்-வயிற்றின்வலதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் செல்வமுள்ளவனாயிருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் வியாதியுள்ளவனாயிருப்பான்-நடுவிரல் இருக்கப்பெற்றவன் கடனுள்ளவனாயிருப்பான் மார்பின்வலதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் அதிகசம்பத்துள்ளவனாயிருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் சாதாரணசெல்வமுள்ளவனாயிருப்பான்-வலதுமுலையில்இருக்கப்பெற்றவன் தன்மனைவியோடு அதிகஒருமையுள்ளவனாயிருப்பான்-இடதுமுலையில்இருக்கப்பெற்றவன் சுகபோகமுள்ளவனாயிருப்பான் வலதுதோளில் இருக்கப்பெற்றவன்செல்வமும், வெற்றியுமுள்ளவனாயிருப்பான்-இடதுதோளில் இருக்கப்பெற்றவன் செல்வமும், பயமுமுள்ளவனாயிருப்பான்-முழங்கைநுனியில் இருக்கப்பெற்றவன் வசீகரமுள்ளவனாயிருப்பான்-இடதுமுழங்கைநுனியில்இருக்கப்பெற்றவன் பகையுள்ளவனாயிருப்பான்-வலதுமுன்கையில் இருக்கப்பெற்றவன்-செல்வமுள்ளவனாயிருப்பான்-இடதுமுன்கையில் இருக்கப்பெற்றவன்-வினையுள்ளவனாயிருப்பான்-வலதுஉள்ளங்கையிலிரு

க்கப்பெற்றவன்-விதரணையுள்ளவனாயிருப்பான் - இடதுஉள்ளங்கையில்
இருக்கப்பெற்றவன்-வறுமையுள்ளவனாயிருப்பான் - வலதுபெருவிரலில்
இருக்கப்பெற்றவன்-ஞானமுள்ளவனா யிருப்பான்சுட்டுவிரலில் இருக்கப்
பெற்றவன்-அறிவுள்ளவனா யிருப்பான்-நடுவிரலில் இருக்கப்பெற்றவன்
தீர்க்காயுளுள்ளவனாயிருப்பான்-அணிவிரலில் இருக்கப்பெற்றவன்பூஷ
ணமுள்ளவனா யிருப்பான்-சிறுவிரலில் இருக்கப்பெற்றவன் நன்மையுள்
ளவனாயிருப்பான்-இடதுகைப்பெருவிரலில் இருக்கப்பெற்றவன் - பாவி
யாயிருப்பான்-சுட்டுவிரலில் இருக்கப்பெற்றவன் மாதகுணமுள்ளவனா
யிருப்பான்-நடுவிரலில் இருக்கப்பெற்றவன்-அற்ப ஆயுளுள்ளவனாயிருப்
பான்-அணிவிரலில் இருக்கப்பெற்றவன்-வறுமையுள்ளவனாயிருப்பான்-
சிறுவிரலில்இருக்கப்பெற்றவன்-மலடனாயிருப்பான்-வலதுபுறங்கையில்
இருக்கப்பெற்றவன் பெருமையுள்ளவனாயிருப்பான்-இடதுபுறங்கையி
ல்இருக்கப்பெற்றவன்-கிலேசமுள்ளவனா யிருப்பான்-வலது அக்குளில் இ
ருக்கப்பெற்றவன்-விதரணமுள்ளவனா யிருப்பான்-இடது அக்குளில் இரு
க்கப்பெற்றவன்-வெகுகபடியா யிருப்பான்வலதுகழுத்தில்இருக்கப்பெற்
றவன் சாதாரணபோகமுடையவனாயிருப்பான்-இடதுகழுத்தில் இருக்க
ப்பெற்றவன் அற்பபோகமுடையவனாயிருப்பான் வலதுகன்னத்தில் யி
ருக்கப்பெற்றவன்-செல்வமும் அலைச்சலுமுடையவனாயிருப்பான் -இட
துகன்னத்திலிருக்கப்பெற்றவன் வறுமையுடையவனாயிருப்பான்-வலது
தாள்வாயில்இருக்கப்பெற்றவன் போகமுடையவனாயிருப்பான் - இடது
தாள்வாயில் இருக்கப்பெற்றவன்-கிலேசமுடையவனா யிருப்பான்-நடுத்
தாள்வாயில் யிருக்கப்பெற்றவன்-ஆயுளுடையவனாயிருப்பான்-மேற்தாள
வாயில்இருக்கப்பெற்றவன்-போஜனப்பிரிய முள்ளவனாயிருப்பான் வல
துமேற்காதில் இருக்கப்பெற்றவன்-சொற்பசெலவுடையவனா யிருப்பான்-
இடதுமேற்காதில் இருக்கப்பெற்றவன்-தூஷணை சொல்பவனாயிருப்பா
ன்-காதுநடுவில்யிருக்கப்பெற்றவன்-சொல்வேறு செய்கைவேறுடையவ
னாயிருப்பான் மூக்கில்வலதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் - செல்வமு
டையவனாயிருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன்-வறுமையு
டையவனாயிருப்பான்-மூக்கின்மத்தியில் இருக்கப்பெற்றவன்சொற்பசெ
லவுடையவனாயிருப்பான்-வலதுகண்ணின் வெள்ளைவிழியில்யிருக்கப்பெற்
றவன் நல்லபுத்தியுடையவனாஇருப்பான்-இடதுகண்ணின் வெள்ளைவிழி
யில்இருக்கப்பெற்றவன்-வெகுகாமமுடையவனா இருப்பான்-வலதுபுரு
வத்தில் இருக்கப்பெற்றவன்-நல்லவுருவங்களைகாணத்தக்க குணமுடை
யவனாஇருப்பான்-இடதுபுருவத்தில் இருக்கப்பெற்றவன்-விகாரவுருவங்
களைக்காணத்தக்க குணமுடையவனாஇருப்பான்-மத்தியில் இருக்கப்பெ
ற்றவன்-பிதுருதவார்த்தியுடையவனாஇருப்பான்-நெற்றியில் வலதுபக்க

த்தில் இருக்கப்பெற்றவன் செல்வமுடையவனாஇருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன்-வறுமையுடையவனாஇருப்பான்-நடுநெற்றிஇல் இருக்கப்பெற்றவன் மிகுந்த ஆயுளுடையவனாஇருப்பான் - வலதுசெவியில் இருக்கப்பெற்றவன்-சதாகாலமும் ஞானவிருப்பமுடையவனாஇருப்பான்-இடதுசெவியில்இருக்கப்பெற்றவன்பழிச்சொல்லையும்பொல்லாதவார்த்தையையும் கேட்பதில் விருப்பமுடையவனாஇருப்பான்.

## சுழி.

வலதுகாதினுள்ளேவலஞ்சுழி இருக்கப்பெற்றவன்-நல்லதிரமுடையவனாஇருப்பான்-இடதுகாதினுள்ளே இடஞ்சுழி- இருக்கப்பெற்றவன்பூமி இல்லாமையும் வறுமையும் உடையவனாஇருப்பான் - சுழிதலையின் வலதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் மிகுந்தசெல்வமுடையவனாஇருப்பான்-இடதுபக்கத்தில் இருக்கப்பெற்றவன் மாறுவேஷங்கொண்டு பிச்சையெடுப்பவனாஇருப்பான்-தலையின்மத்தியில் இருக்கப்பெற்றவன்சாதாரணஸ்திதியுடையவனாஇருப்பான்-அகத்தும்புறத்தும் உள்ளஇலட்சணங்கள் இன்னும் அநேகமுள்ளன அவற்றைவிரிக்கிற் பெருகும்.

இவ்வுறுப்புகளை யளந்தறிந்தஅளவினால் ஆயுளும்ஐசுவரியமும் அறியத்தக்க இலட்சணங்களில் சிலவருமாறுகாண்க.

வலதுகைவிரல்களிற்றில் அளவையுடையகயிறு-முழங்கைமுதல் நடுவிரலின் நடுஇறைநுனிவட்டமா வந்திருக்கப்பெற்றவன் - அகண்டசெல்வமுடையவனாஇருப்பான்-அந்தவிரலின்மேல் இறைவரைஇல்வந்திருக்கப்பெற்றவன்-மந்திரத்தொழிலுடையவனாஇருப்பான்-நடு இறைவரைஇல் வந்திருக்கப்பெற்றவன்-நன்மையுடையவனாஇருப்பான்-நடுவிரலின் அடிஇறைவரைஇல்வந்திருக்கப்பெற்றவன்-உத்தமசிருடையவனாஇருப்பான் உள்ளங்கைவரைஇல்வந்திருக்கப்பெற்றவன்-வறுமையுடையவனா இருப்பான்.

## இதுவுமது,

கால்பெருவிரலில் முதல்நெற்றிவரைஇலுள்ள அளவினையுடைய கயிறால் உடம்பைச்சுற்றி முலைமார்புக்குச் சரியான அளவினையுடைய கயிறும் அவ்விரண்டின் நான்கிலொருபாகமுஞ்சேர்த்து தன்கையால் நூற்றெட்டு அங்குலமிருக்கப்பெற்றவன் குபேரசம்பத்துடையவனாஇருப்பான்-நூற்றெட்டு அங்குலத்துக்கு அதிகமிருக்கப்பெற்றவன்-குறைந்த ஆயுளுடையவனாஇருப்பான்-குறைவா இருக்கப்பெற்றவன்வறுமையையுடையவனாஇருப்பான்.

வலதுதோள்தொடுத்து வலதுகை நடுவிரல் நுனிவரையிலுள்ள அளவினையுடைய கயிற்றின் இரண்டுமடங்கு கால்பெருவிரல்முதல் நெற்றிமயிர் வரையில் வந்திருக்கப்பெற்றவன் (௱) வயதும்செல்வமு முள்ளவனு இருப்பான்-நெற்றிமத்திவரை இல்வந்திருக்கப்பெற்றவன் (௯௰) வயதுள்ளவனு இருப்பான்-புருவவரைஇல் வந்திருக்கப்பெற்றவன் (௮௰) வயதுள்ளவனு இருப்பான்-நாசிவரை இல் வந்திருக்கப்பெற்றவன் (௭௰) வயதுள்ளவனு இருப்பான்-வாய்வரை இல்வந்திருக்கப்பெற்றவன் (௬௰) வயதும் சொற்பபோகமுள்ளவனு இருப்பான்-முகக்கடைவரை இல்வந்திருக்கப்பெற்றவன் (௫௰) வயதுள்ளவனு இருப்பான்-கழுத்துவரைஇல் வந்திருக்கப்பெற்றவன் (௪௰) வயதுள்ளவனு இருப்பான்- இந்த அளவுக்குக் குறைவாகவந்திருக்கப்பெற்றவன்- அற்பவயதுள்ளவனு இருப்பான்.

இவ்வாறு அளக்கும் நூலுக்கு மஞ்சள் - சந்தனம்-முதலியவற்றை நத்தடவி தூபதீபங்காண்பித்து விநாயகமூர்த்தியையன்போடு தியானித்து அளக்கவேண்டியது-

இந்த அளவுசாஸ்திரம் ஸ்திரீகளுக்கும்பொருந்தும் - புருஷர்களுக்கு (௰௬) வயதுக்குமேலும் ஸ்திரீகளுக்கு (௰௨) வயதுக்குமேலும் அளந்து பார்க்கவேண்டியது,

சாமுத்திரிகாலக்ஷணம்

முற்றிற்று.

---

சாமுத்திரிகலக்ஷணத்துக்குறிய ஸ்திரீகளும்புருஷர்களும்.



